


# ஆரோவில் செய்திமடல்

கிளை - 27 | நவம்பர் – 2023 | இலை - 2




**ஸ்ரீஅரவிந்தர் சமாதி நாள் - டிசம்பர் 5**

**பொன்னொளிரும் பூவுலக உடல் 05.12.1950**



# திருக்குறள்

**சிறப்புஈனும் செல்வம் பெறினும் பிறர்க்குஇன்னா**
**செய்யாமை மாசற்றார் கோள்** **(இன்னாசெய்யாமை 311)**

செல்வச் செழிப்பும் சிறப்பும் எய்துதற்கு உதவினாலும் எவருக்கும் இடுக்கண் செய்யாதிருப்பதே தூயவர் கொள்கை..

உரை: **கவிஞர் சிற்பி**

## ஆசிரியர் பக்கம்

### தீபாவளிவழியில் வந்திடும் வலிகள்

மீண்டும் ஒரு தீபாவளிப் பண்டிகைக் கொண்டாட்டங்களை நிறைவு செய்தபின் இம்மடலைச் செதுக்குகிறேன். சில தினங்களுக்கு முன்பிருந்தே வேட்டி, கைலி, துண்டு, சேலை, ஆடைகளை மிஞ்சும் வண்ணம் சேதாரம், செய்கூலி இல்லாத தங்கநகை, நடிக நடிகையரின் பளிச்சிடும் புன்னகைகள் நகைமண்டிகளின் வணிக விளம்பரங்கள் எல்லாத் திக்குகளிலிருந்தும் இஸ்ரேல், ரஷிய ஏவுகணைகளைப்போல பாய்ந்துவந்து நமது சுண்டைக்காய் சேமிப்பு களையும் பாட்டுப் பாடி ஆட்டம்ஆடி சுருட்டிக்கொண்டோடின. மேருமலை வட்டிக்கடன்களைச்சுமக்கும் சுமை தாங்கிகளாகப் பாவம் இல்லறத்தார்.

புரட்டாசி மாதமே புரட்சிகரமான போராட்டங்கள் புறப்பட்டுவிடுகின்றன, ஐப்பசி தீபாவளி “போனஸ்“ கேட்டு மதுக்கடைகளில் பணியாற்றுவோர் முதல் நெடுஞ்சாலைப் பணியாளர்கள்வரை. பாவம் ஊழியர்கள். தீபாவளி நெருங்க நெருங்க என்னென்ன பலகாரங்கள் செய்யலாம் அதற்கு என்னென்ன அரிசி, பருப்பு, ரவை, சர்க்கரை, முந்திரி, எண்ணெய், நெய், வண்ணச்சாய இரசாயனங்கள் தேவை என மகளிர் பத்திரிகைப் பக்கங்கள் மனதை வருட ஆரம்பிக்கும். அத்தனையும் வணிக நிறுவனங்களின் கருணைமழைதான்.!



## அன்னையின் பிரார்த்தனை

எம்பெருமானே, முற்றிலும் சுதந்திரமாக நான் உன்னை நோக்கிப் பறந்து வர, என்னை அழுத்தும் மனக்கட்டுமானங்களிலிருந்து என்னை விடுவி. எம்மனே, விஸ்வசீலனே, கண்கூடான பரம ஒருமையே, தடுக்கமுடியாத ஆர்வத்தினால் உந்தப்பட்டு நான் நினது இதயத்தில் வந்து ஒட்டிக்கொண்டேன். அதன் மேல் நினது இதயமாகவே ஆகிவிட்டேன். அப்பொழுது விளையாட்டாக உலகங்களையெல்லாம் படைத்திடும் தெய்வக்குழந்தையே நின் இதயம் என்பதை அறிந்துகொண்டேன். ”ஒரு நாள் நீ என் சிரசாவாய்” ஆனால் தற்போதைக்கு உன் பார்வையைப் புவியை நோக்கித் திருப்பு” என்று நீ எனக்குச் சொன்னாய். இப்போது நான் இம்மண்ணுலகில் விளையாடும் ஆனந்தக்குழந்தை..

ஸ்ரீஅன்னை,

என்னைப்போன்ற எழுத்தாளர் பிறவிகள் நரகாசுரனிலிருந்து கிருஷ்ண பரமாத்மா வரை எண்ணியும், அன்னை பராசக்தியின் மகிமை முதல் அடுத்த வீட்டு அம்மாவின் வாசற்படி கோலம்வரை உணர்ந்தும் எழுதிக் குவித்து, கேட்கும் பத்திரிகை இதழ்களின் சிறப்பு தீபாவளி மலருக்கு வகைப்படுத்தி அனுப்புவதும் ஒரு பழக்க தோஷம்தான். மலர்க்காரர்களும் நம்மிடம் கேட்டுவாங்கிப் பெற்றாலும் முன்னணி நடிக நடிகையரின் துணைகள், செயலாளர்கள், ஒப்பனைக் கலைஞர்கள், அவர்களது செல்லப்பிராணிகள் பற்றிய படக்கதைகளுக்கு முன்னுரிமை கொடுத்த பின் நம் அபூர்வப் படைப்பினை, பல அரசியல் விளம்பரங்களுக்குப்பின் ஒரு மூலையில் வைத்திருப்பார்கள். அதற்கே ஒரு மூன்று நான்கு தொல்லைபேசிகள் பாராட்டுமழை பொழியும்.!.

இப்படியாக, நம்மைச் சுற்றியிருக்கி றவர்களுக்கு, பாத்தியப்பட்டவர்களுக்கு மனம் கோணாதபடி தேவையானதை ஒரு வழியாக வாங்கிக்கொடுத்து இளைத்துக்

களைத்துத் திரும்பினால் வீட்டிற்குள் ஒரே எண்ணெய்க் கமறல்-பட்சணப் பரிசோதனைகள், திண்ணைக்கு வந்தால் பட்டாசுப்புகை நடுவே இள வட்டங்களின் வீரதீர சாகசங்கள். வீட்டிலிருந்து வெளியே செல்லலாம் நூலகம் போகலாம் என்றால் இதுவரை நாம் பார்த்தறியாத தபால்கார சேவகர், மின்துறை விளக்கேற்றுநர், மாட்டாஸ்பத்திரி வாசல் பெருக்குநர், சினிமாக் கொட்டகை டிக்கெட் கிழிப்பவர், தெருவோரம் துணிமணி பெட்டி போடுவோரின் துணைப்பையனார், வாசல்படியில் நாளிதழை இலாகவமாக விசிறியடிக்கும் பேப்பர்த் தம்பி, துணிப்பைக்குள் பால்பாக்கெட்டைத் திணித்துப் போகும் பசும்பால் ஆளுநர், பக்கத்துவீட்டு நாய் நம்மீது பாய்ந்துவிடாமல் ஜாக்கிரதையாக நடத்திச் செல்வதுபோல நடிக்கும் அவ்வீட்டுத் தோட்டக்காரர். நம் வீட்டு எல்லைவரை உடையாமல் கிடக்கும் யாரோ போட்டு விட்டுப்போன குடிகெடுக்கும் காலி குப்பிகளைப் பொறுக்கித் தரம்பிரித்து விற்கும் வெற்றிலைக் குதப்பித் துப்பும் பாட்டி, .. இப்படிவருவோர் போவோர் எல்லாருமே ஏதோ காரணமில்லாமல் இரண்டும்கெட்டான் சிரிப்பொன்றை உதிர்க்கிறார்கள். அந்தச் சிரிப்பிற்கு இனாம் எனும் பொருள் உண்டு என்றும் தீபாவளி அன்பளிப்பு என்றும் அலங்காரமாகச் சொல்லிக் கொள்ளலாம் என்று அனுபவாச்சாரியார்கள் உரை செய்துள்ளனராம்.



தீபாவளி அதிகாலை வந்தாயிற்று, எண்ணெய்யில் திருமகளையும் நகரவைக் குழாய்த்தண்ணீரில் கங்கையையும் கண்டு வணங்கி, ஒருவழியாய் புதுத்துணிகளுக்குள் நம்மைச் செருகிக் கொண்டு தீபாவளி லேகியத்தை கண்களில் நீர்சூழ விழுங்கிய பின்னர் வரும் பட்சணம் தின்னும் பரீட்சையில் தேர்வு பெறவும் தீபாவளி விடைபெறவும் சரியாக இருக்கும்!

நண்பர்களே – நான் இதைப்பற்றி எல்லாம் எழுத எண்ணவில்லை. ஏதோ வந்து விழுந்துவிட்டது. பொறுத்தருளுங்கள். நான் சொல்ல வருவதே வேறு அதாவது தீபாவளி நிறைவடைந்த மறுநாள் காலையில் நம் ஊரின் நிலவரம் என்ன என்பது பற்றிய எனது கவலையை எழுதவிடாதபடி தடுக்கும் மூச்சு முட்டல், லொக்லொக் இருமல், வெடிச்சத்தத்திற்கு இணையான தும்மலுக்கெல்லாம் காரணம் உங்களுக்குப் புரியாமலா இருக்கும்? வீட்டு வாசல்களில் கோலங்களுக்குமேல் அலங்கோலமாய் வண்ண வண்ணத் தாள்கள் வெடித்தும் வெடிக்காமலும்போன சிவ, விஷ்ணு, தேவியர், பசு, கன்று, பிரபல நடிகை,நடிகையரின் நொந்துபோன படங்களின் பரவலாக்கங்கள், அழகிய குப்பைகள், நெகிழிப்பைகளின் வேடந்தாங்கல்கள். மத்தாப்புகள். கருகிய கம்பிகளின் கூர்முனைப்பார்வைகள், தின்று தீர்த்தபின் விட்டெறிந்த பலகாரக் கூடைகள், அட்டைப்பெட்டிகள், காகிதத் தட்டுகள், ஒருமுறை பயன்படுத்தியதும் வீதிக்கு வரும் குட்டிக்கரண்டிகள், குவளைகள், கை வாய்த்துடைப்பான்கள், குழந்தைகளும், நங்கையரும் மூத்தோரும் பயனுக்குப்பின் கழற்றி எறியும் உள்அரவணையாடைகள் அடாடா, அடாடா நமது பொருளாதார வளர்ச்சியும், நகரமயமாக்கலும், சந்தைவசதிகளும் எப்படியெல்லாம் தெருக்களைச்சுற்றி வளைத்துப் போட்டிருக்கின்றன என்று பார்த்துப் பார்த்துப் புன்னகைக்க முடியாமல் தீபாவளி மறுநாளில் புதிய நரகாசுரனின் மறுபேரவதாரத்தைக் கண்டு மிரண்டு

போயிருக்கிறவர்களே! டன் டன்னாய் ஒவ்வொரு ஊரிலும் வானவேடிக்கைப் பட்டாசுக் குப்பைகளைச் சேகரிக்க ஆயிரக்கணக்கான சிறப்பு ஊழியர்களைப் பணியில் அமர்த்தும் அரசு எந்திரம் செலவு செய்யும் காசுபணம் எங்கிருந்து வந்தது? நாம் வழங்கும் வரிப்பணத்திலிருந்துதான் என்பதை அறியமாட்டோமா? என்ன அரசோ குப்பை அள்ளவும், சாக்கடை வாரிஎடுக்கவும் இயலாமல் ஏமாற்றுகிறதே என்று கொசுக்கடி வேதனையில் குமுறும் அருமை சகோதரத்திருக்குலமே,குப்பைகளை நரகாசுரனா கொண்டுவந்து போட்டான்,? அவனே பேசுகிறான். “ஐயன்மீர், அம்மையீர்! என்னை விட்டுவிடுங்கள். என் பெயர் சொல்லி மக்காத குப்பைகளைப் போட்டு மாசுபடுத்தி பூமித்தாய்க்குத் துன்பம் விளைவிக்காதீர்கள். தாயாரின் அருளால் எனக்கே நரகத்திலிருந்து விமோசனம் கிடைத்துவிட்டது. எனவே என் பெயர் சொல்லிப் பூதாகாரமாக வளர்ந்து வரும் நெகிழிஅசுரனை எக்காரணம் கொண்டும் ஊருக்குள் சேர்க்காதீர்கள். நெகிழியாசுரன் மிகவும் கொடியவன். அவன் சாக்கடை அடைப்பான். நீர்நிலைக்குழப்புவான். கருகினால் நச்சுப்புகைக் கிளப்புவான். நமது பொறுமையுள்ள பூமாதேவியை அழித்திடத் துணிவான்”. ...

என்றெல்லாம் மெலிதாகக் கருப்பாக எழுதிச் செல்கிறது எனது புதிய பேனா – (தீபாவளி அன்பளிப்பாக வந்துள்ளது.!)

இதுவரை பொறுமையாக வாசித்து வந்துள்ள வாசக அன்பினருக்கு வணக்கமும் வாழ்த்தும். அடுத்து ஊர்ந்து வரும் கார்த்திகை அஃதொப்பதில்............

கார்த்திகையின் பனங்கருக்குக் கார்த்தி சுற்றவும், சொக்கப்பனை கொளுத்தவும் அடுத்த தலைமுறை கற்றுக்கொள்ளட்டுமே.

அதற்கான வலைதளம் எது? .



அன்புடன்
**இரா.மீனாட்சி**

## ஸ்ரீஅரவிந்தர் – 150
## ஆரோவில் தில்லைகணபதி
## படைத்தளிக்கும் அரவிந்தம்

"யோகப்பயிற்சி,
இந்திய நாகரிகமும் பண்பாடும்
வேதத்தின் உள்ளார்த்தம்
மனித சமூக வளர்ச்சி
செய்யுளின் இயல்பும் வளர்ச்சியும்
மனிதகுல ஒற்றுமை" என
அந்த ஆரியத்தாமரை
பல இதழ்கள் விரித்தது.

1920 ஏப்ரல் 24.
புதுவைக்கு – ஆன்மிகப் பணிக்கு
ஸ்ரீஅன்னையின் நிரந்தர வருகை

ஸ்ரீஅரவிந்தருக்கு உறுதுணையாக
ஆசிரமத்தின் மூலம்
ஆன்மிகப்பணி துவக்கம்
இதன் பயனாக,
அரவிந்தரின் யோக அப்பியாசம்
ஆன்மிக எவரெஸ்ட்டின்
உச்சியைத் தொட்டது.
ஆறு ஆண்டுகள்
அதிதீவிர யோகப் பயிற்சியால்
ஆன்மிக இமயத்தில்
வெற்றிக்கொடி
நாட்டப்பட்ட நாள்
1926 நவம்பர் 24
கோடி மைல்கள்
தூரத்தில்
ஒரு நட்சத்திரம்
சூரியன் அதன்.
வெள்ளொளியில்
வெளிப்படும் சக்தியால்
பூமியில் வாழும் உயிரினங்கள்,
சுழலும் மின் எந்திரங்கள்,
உழலும் கணினிகள்.
அதுபோல...
பிரபஞ்சத்தில் உள்ள ஓர் உயர்சக்தியை
மனிதகுல வளமைக்கு
ஸ்ரீஅரவிந்தர் அவர்தம் யோக ஈர்ப்புச் சக்தியால்
இப்புவிக்கு ஈர்த்து வந்த உன்னத நாள் இது.



(மேலும்மலரும்)

## வாசகர் மடல்

அன்புடையீர் வணக்கம். நலம்தானே. செப்டம்பர் செய்திமடல் இதழ் கிடைத்தது/ ஜெயகாந்தன் உரை முழுமையாக இடம்பெற்றது இந்த இதழில் விசேஷம். வாழ்க இதழ் பணி

– கவிஞர் சுப்ரபாரதிமணியன், திருப்பூர்.

## சித்தாஞ்சலி

பஷி என்று நம்மால் அன்பாக அழைக்கப்பட்ட பஷிகபூர் இன்று இல்லை தமது 91ஆவது அகவையை நிறைவு செய்து விட்டு விடைபெற்றுள்ளார். இங்கிலாந்தில் பொறியாளர் பட்டம் பெற்று, பலவேறு நிறுவனங்களுடன் ஆலோசகராகத் தொடர்புகொண்டு பணியாற்றியிருந்தாலும் ஸ்ரீஅன்னையின் தொண்டராகவே ஆரோவில் பணிக்களத்தில் நிறைந்திருந்தார். பலவேறு வளர்ச்சிப் பணிகளிலும் ஆரோவில்லின் தனித்துவமானதொரு பொருளாதார அறநெறியிலும் அடுத்த தலைமுறையினர் ஈடுபாடு கொள்வதில் கவனம் செலுத்தி வந்தார். ஸ்ரீஅன்னையின் கனவு நகரத்தின் சிறப்பு மையமான CIRHU (சென்டர் ஃபார் இன்டர்நேஷனல் ரிசர்ச் அண்டு ஹ்யூமன் யூனிட்டி) எனும் அனைத்துலக மனிதகுல ஒற்றுமை ஆய்வு மையத்தை உருவாக்குவதில் முனைப்புடன் அயராது பணிசெய்து வந்தார். அக்கனவு ஈடேற்றமே பஷிக்கு ஆத்ம நிறைவினைக் கொண்டுவரும் ஓம்சாந்தி.

சிவகுமார் சுந்தரம்.

## பெண்ணின் பெருமை

என்னைப் போன்ற சாதாரணப் பெண் இவ்வளவு பெரிய காரியங்களில் என்ன செய்ய முடியும்? எனக்கு மனோபலம் இல்லை. புத்தி இல்லை. அந்தக் கருத்துக்களை பற்றி எல்லாம் சிந்திக்கவே எனக்கு அச்சமாக இருக்கிறது? என்று நீ சொல்லலாம். அதற்கு ஒரு வழி இருக்கிறது.

பகவானிடம் சரண் அடை. கடவுள் கருணை, பலம் என்ற அருள் நெறியில் நீ ஒரு முறை புகுந்தால் போதும். உன்னிடமுள்ள குறைகளை எல்லாம் அவர் நீக்கி விடுவார். ஆண்டவனைச் சரணடைந்தவர்களிடமிருந்து அச்சம் அகலும்.

என்மீது உனக்கு நம்பிக்கை இருந்தால், பத்து பேர் சொல்வதைக் கேளாமல், நான் கூறுவதையே கேட்டால், நான் என் பலத்தையே உனக்கு வழங்குகிறேன். அதனால் என் பலம் குன்றாது; குறையாது; மேலும் கூடும்.

மனைவி கணவனின் சக்தி என்கிறோமே, அதன் பொருள் என்ன? கணவன் தன் மனைவியிடம் தன் பிரதி உருவத்தைக் கண்டும், தன் மகத்தான விருப்பங்களின் எதிரொலியை அவளிடம் கேட்டும் அவன் இரட்டிப்பு வலிமை பெறுகிறான்.

(தனது மனைவி மிருணாளினி தேவிக்கு ஸ்ரீஅரவிந்தர் எழுதிய கடிதத்திலிருந்து....)

## தமிழ்ப் பழமொழிகள்

### வி

1. விசுவாசக்காரனுக்கு வெந்நீரும் பருக்கையும்; தரட்டோட்டக்காரனுக்குத் தயிரும் சோறும்.
2. விடிய விடிய கதை கேட்டு, சீதைக்கு ராமன் சித்தப்பன் என்றானாம்.
3. விடிய விடிய மழைபெய்தாலும், ஒட்டாங்கண்ணி முளைக்குமா?
4. விதி கெட்டவன் விறகுக்குப் போனால் விறகு கிடைத்தாலும் கட்டக் கொடி கிடைக்காது.
5. விதை ஒன்று போட, சுரை ஒன்று முளைக்குமா?
6. விலைமோரில் வெண்ணெய் எடுத்து, தலைமகளுக்குக் கல்யாணம் பண்ணுவான்.
7. விளையும் பயிர் முளையிலே தெரியும்; வித்துச் சுரைக்காய் பிஞ்சிலே தெரியும்.
8. விளக்கை வைத்துக்கொண்டு நெருப்புக்கு அலைவானேன்?

சு. சண்முகசுந்தரம் – சாகித்ய அகாதெமி வெளியீடு.

# கவியோகி சுத்தானந்த பாரதியாரும் மகான் ஸ்ரீஅரவிந்தரும்

அரவிந்த மகானுடைய சமாதி பலருக்குள் பலவிதமான மாற்றங்களை ஏற்படுத்தியது என்றால் கவியோகியாருக்குப் புதிய திருப்பத்தை உண்டாக்கியது என்று அவரே பதிவு செய்துள்ளார். அரவிந்தரின் திருவுடலுக்கு மலர்மாலை சூட்டியதைப் போலவே அமுதனைய தமிழால் இரண்டு பாமாலைகளையும் சூட்டியிருப்பது பெருஞ்சிறப்பாகும். இப்பாடல் அற்புதமான அவர்தம் வாழ்க்கை வரலாற்றில் அழுந்தப் பதிவாகியிருக்கிறது என்பதும் குறிப்பிடத்தக்கது.



யாராரும் காணா அரவிந்தா, நின்னுடலைப்
பாராரும் காணப் பறந்தாயோ – சீராரும்
யோகத்தாற் போக முவந்தாய்; அரவிந்தா
ஏகத்தால் என்னுள் இரு. (1)

நித்தியமே தேகமென நீளப் பறையடித்த
சித்தர்களும் ஊனுதறிச் சென்று விட்டார் – இத்தலத்தில்
எந்தை இறையருளே எண்ணி, எனதுயிரே,
வந்தவினை செய்து மகிழ். (2)

'எல்லாரும் தெளிய கண்டு அறிந்து கொள்வதற்கு அரியவராய் நின்னை உள்ளும் புறமும் ஒடுக்கியிருந்த அரவிந்தப் பெருமானே, உன்னுடைய உடலையேனும் இந்த உலகம் தெளியக் கண்டு கொள்ளட்டும் என்று இந்தக் கட்டினை விட்டுப் பறந்து விட்டீரோ? முறைபொருந்திய யோக சாதனத்தையே போகமாக முழுதும் விரும்பி ஏற்றவர் நீர், அரவிந்தப் பெருமானே, ஒருணர்வால் என்னுள் நிலைத்திருப்பீராக' என்றும்,இந்த உடலை மெய்யென்றும் நிலையென்றும் நிறுத்திக் காட்டி பெருமுழக்கம் செய்திட்ட சித்தர்களும் கூடத் தங்களின் உடலை உதறிவிட்டுச் சென்று விட்டார்கள். இத்திருத்தலத்திலே நிறைவு பெற்றுள்ள எந்தையாகிய அரவிந்தப் பெருமானே, இறையருளையே கருதிச் சென்றனையோ, இன்றிலிருந்து எனதுயிருமாகி விட்டீர், நீர் இப்பூவுலகிற்கு வந்து தோன்றி ஆற்றி முடிக்க வேண்டிக் கருதியிருந்த அருவினைகளை யெல்லாம் எங்களைக் கருவியாகக் கொண்டு செய்து மகிழ்ந்தி ருப்பீரே" என்றும் போற்றிப் பாடுகிறார்.



அரவிந்த மகான் கருதியிருந்த அந்த அருவினைகள் தான் என்ன?

மனிதனைத் தேவ நிலைக்கு உயர்த்துவதும், மனிதனின் தற்போதைய நிலையிலிருந்து அவனை உயர்ந்தி அதிமானுட நிலைக்கு இட்டுச் செல்வதும், இதற்கான முயற்சிகளில் அயராது ஈடுபடுதலும், அதற்கு வழிகாட்டுதலும், கடவுளின் அரசை இம்மண்ணுலகத்தில் கொண்டு வந்து நிறுவுவதும், துன்ப சாகரத்தில் சிக்கி உழல்கின்ற மனிதர்களை மீட்டெடுத்து, அவர்களை அருளாளர்களாக, சன்மார்க்கர்களாக, தெய்வீக வாழ்க்கை நெறியுடையவர்களாக உயர்த்திப் புதியதோர் உலகத்தை உருவாக்குவது, மனித மனத்துள்ளே புதைந்து கிடக்கும் இறைமைக் குணங்களை தட்டியெழுப்பி வெளிக்கொணர்வது ஆகியனவேயாகும். இத்தகைய அருவினைகளைத் தொடர்ந்து மேற்கொள்ளத் தன்னையும் தன்னைப் போன்றவர்களையும் கருவியாக்கிக் கொள்ள வேண்டும் என்றே கவியோகியார் வேண்டுகிறார்.

ஸ்ரீஅரவிந்த மகானுடைய பிரிவுத் துயரம் சாதாரண மனிதர்களுக்கு வாட்டத்தைத்

தரும். ஆனால் அவர்தம் மெய்யடியார்களுக்கு அவர்தம் பணிதொடரும் வழிமரபினருக்கு ஊக்கத்தையும் நிறைந்த பேற்றையும் தரும் என்பதைக் கவியோகியாரின் வாயிலாக அறியலாம். ஆயினும் அதன் ஆழத்தை உணர்ந்து கொள்வது கடினமாகவே இருக்கும்.

“இச்சம்பவம் என் ஆத்ம சாதனையிலும் சோதனையிலும் ஒரு புதிய திருப்பத்தை ஊக்கியது. பதியன்பு பலமானது. மகாதுரிய சமாதியில் நாதவிந்து கலாதீதமாய் உன்மனி சமனிக்கப்பாலாய், எட்டாம் நிலை கடந்த பரம்பொருளைக் கலந்துணரும் பரமானந்தம் பெற்றேன்” என்று அந்தப் பரமானந்தத்தைப் பதிவு செய்கிறார்.

இதன் ஆழத்தை அறிந்து கொள்வதற்கு இன்னொரு சான்றினையும் நாம் காட்ட இயலும். ஸ்ரீஅரவிந்த மகானுடைய சமாதி என்பது எத்தனை ஆற்றல் பொருந்திய சக்தி நிலையம் என்பதற்கு மற்றொரு கவி வாழ்த்தினையும் இங்கு பொருத்திக் காட்டலாம். கவியோகியாரோடு கவியரங்கம் கண்ட பெருமைக்குரிய பத்மஸ்ரீ சிற்பி பாலசுப்பிரமணியம் அவர்கள் புதுவையில் ஸ்ரீஅரவிந்த சமாதியிலும் அவர்தம் அறையிலும் தான் உணர்ந்த அந்த அற்புத அனுபவத்தைப் பின்வரும் பாடலாக்கித் தந்துள்ளதை முந்தைய கவியோகியாரின் வாக்கோடு ஒப்பிட்டுக் கண்டு அறியலாம்.

புருவ நடுவில் ஒரு சூர்யோதயம்
புலன்களில் அரவிந்த உயிரோவியம்
நிறையும் ஆனந்த ஞானோதயம்
நேற்றில்லை இன்றில்லை சாந்தி மயம் – ஓம்
சாந்தி மயம் சாந்தி மயம்.

அறிவு துயில் கொள்ளும் சரணாலயம்
ஆழ்மனம் விழித்தெழும் விடிவாலயம்
கனவுகள் உயிர்த்தெழும் கவிதாலயம்
கண்ணுளே மலர்ந்திடும் தேவாலயம் – ஓம்
சாந்தி மயம் சாந்தி மயம்.

இந்தப் பாடலை ஸ்ரீஅரவிந்தர் மகாசமாதியடைந்து 57 ஆண்டுகளுக்குப் பிறகு கவியோகியாரைப் போலவே உள்ளுணர்ந்து பாடியிருப்பதும் சிறப்பானதாகும்.

‘ஆசிரமம் அன்னையின் படைப்பு என்றார் மகான் அரவிந்தர். ஒளியும் எழிலும், எளிமையும், ஒழுங்கும் எப்போதும் குடி கொண்டிருக்கும்.

மகான் அரவிந்தரது கனவு அவரது சமாதிக்கும் ஆசிரமத்துக்கும் செல்லும் யாவரையும் பற்றிக் கொள்ளும் என்றால், அவரது திருப்பார்வை பெற்றவர்களின் உளநிலை மாற்றங்களைக் குறித்துச் சொல்லவே தேவையில்லை. அத்தகை அருளுணர்வுக்குச் சுத்தானந்த பாரதியார் ஆளானதில் ஒன்றும் ஆச்சர்யமில்லை.

மகான் ஸ்ரீஅரவிந்தர் அலிப்பூர் வழக்கின் பிடியில் சிக்கிச் சிறையுண்டிருந்த சமயம். நீதிமன்றத்திலே வழக்கு நடந்து கொண்டிருந்த வேளை. குற்றஞ்சாட்டப்பட்டுக் குற்றவாளிக் கூண்டிலே நிற்கக்கூடிய அரவிந்தப் பெருமானைக் கண்ட நீதிபதி கூறியதைக் கேளுங்கள், “குற்றம் சுமத்தப்பட்டிருக்கும் இந்த மனிதர் வழக்கு மன்றத்தின் முன்னிலையில் மட்டும் நிற்கவில்லை. வரலாற்றின் உயர்நீதி மன்றத்தின் முன்னிலையிலும் நிற்கிறார்”.

அரவிந்த மகிமையை கவியோகியார் கண்டு போற்றியது புலனாகிறதா?

**முதுமுனைவர் சொ. அருணன்** **- வளரும்**

## ஸ்ரீஅரவிந்தர் சிந்தனை மணிகள்



தீயவற்றின் கவர்ச்சியைக் காட்டிச் சோதிக்கும் போதுதான் கடவுள் மிக நன்றாக வழிநடத்துகிறார்;கடுமையாகத் தண்டிக்கும்போதுதான் முழுமையாக அன்பு செலுத்துகிறார். தீவிரமாக எதிர்க்கும்போது தான் மிகச் சிறந்த முறையில் உதவுகிறார்.

சிறுவர் இலக்கியம்

# மழைக்காலப் பாட்டுகள்

I

எங்கள் வீட்டுப் பக்கமே
பொங்கிப் பாயும் ஓடையே
வானம் கொட்டும் மழையிலே
தானாய்ப் பெருகி ஓடுதே

காகிதக் கப்பல் செய்தோமே
கடிதம் ஒன்றும் வைத்தோமே
வெள்ளம் சுமந்த கப்பலுமே
பள்ளத்தில் மாட்டிக் கொண்டதே

II

கடலிலே அலையலையாம் (ஐலசா)
படகிலே வலைவலையாம் (ஐலசா)
துடுப்பாலே அசைஞ்சி அசைஞ்சி (ஐலசா)
சடுதியிலே மீன்பிடிச்சு (ஐலசா)
என்ன மீனு
கணுவா மீனு
என்ன மீனு
காரை மீனு
என்ன மீனு
வவ்வால் மீனு
என்ன மீனு
வஞ்சிர மீனு (ஐலஸா)

– மதுரை மகள்.



## அறிவோம் நம் தமிழ் – XI
## தமிழில் பழந்தமிழ்க் கலைச்சொற்கள்

GRAIN தானியம்
கூலம்
கூலமணி
மணல்போன்ற சிறு துணுக்கு
கட்டையில் உள்ள சிறு நார்
சிறு அளவு
பொன் துகள்
மண் சர்க்கரை போன்று சிறுதுகள்
வெடி மருந்துப் பொடி
நிறுத்தல் அளவையில் மிகக் குறைந்த அளவு
நெல்மணி
கெட்டிச்சாய வகை
தோலின் மயிரற்ற பக்கம்
பாங்கு
போக்கு
உள்ளார்ந்த இயல்பு

GROUP குழுவம்
தொகுதி
கூட்டம் (ஒரே செயலில் ஈடுபடுவோர்)
பொருள்கள் திரட்டு
மக்கள் திரட்டு | கூட்டு

நன்றி: ஆங்கில – தமிழ் வகுப்பிற்குப் பயன்பட்ட அகராதி.
International Advanced Deluxe Dictionary.


## தனிச்சுற்றுக்கு மட்டும்

வெளியீடு : ஆசிரியர் குழு
ஆரோவில் செய்திமடல்
இளைஞர்கள் கல்வி மையம்
ஆரோவில் - 605101
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு
மின்னஞ்சல் : tamil@auroville.org.in
தொலைபேசி : 0413-2623773
ஆசிரியர் : இரா.மீனாட்சி
வடிவமைப்பு : சொ.அருணன், புதுவை.
அச்சு : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ், சிவகாசி.